**அத்தியாயம்: 17 பாடல்: 16**

மனத்தெளி வுடன்கூடிய அமைதியும்
மனதின்இ யல்பானஅன் பும்மௌனமும் ।
மனதினடக் கமும்உள்ளத் தூய்மையும்
மனதினுடைய தவமாகும் இவையாவுமே ॥

**मनः प्रसादः सौम्यत्वं मौनमात्मविनिग्रहः ।**
மந: ப்ரஸாத:³ ஸௌம்யத்வம் மௌநமாத்மவிநிக்³ரஹ: ।
**भावसंशुद्धिरित्येतत्तपो मानसमुच्यते ॥**
பா⁴வஸம்ஶுத்³தி⁴ரித்யேதத்தபோ மாநஸமுச்யதே ॥

**அத்தியாயம்: 17 பாடல்: 17**

பலனைவிரும் பாதவர்களாலும் யோகத்தில்
ஒருநிலைப்பட் டவர்களுமானம னிதர்களால் ।
உயர்ந்தநம் பிக்கையோடு செய்யப்படும்
இம்மூவிதத் தவம்சாத்வீகம் எனப்படுமே ॥

**श्रद्धया परया तप्तं तपस्तत्त्रिविधं नरैः ।**
ஶ்ரத்³த⁴யா பரயா தப்தம் தபஸ்தத்த்ரிவித⁴ம் நரை: ।
**अफलाकाङ्क्षिभिर्युक्तैः सात्त्विकं परिचक्षते ॥**
அப²லாகாங்க்ஷிபி⁴ர்யுக்தை: ஸாத்த்விகம் பரிசக்ஷதே ॥

அத்தியாயம்: 17 பாடல்: 18

எத்தவமானது உபசாரமாகவும் மரியாதை-
பகட்டிற்காக வும்நிலையற் றதாயும் ।
உறுதியற்றது மாயுளதோஅத் தவமானது
இராஜஸமானது என்றிங்குகூறப் படுகிறதே ॥

सत्कारमानपूजार्थं तपो दम्भेन चैव यत् ।
ஸத்காரமாநபூஜார்த²ம் தபோ த³ம்பே⁴ந சைவ யத் ।
क्रियते तदिह प्रोक्तं राजसं चलमध्रुवम् ॥
க்ரியதே ததி³ஹ ப்ரோக்தம் ராஜஸம் சலமத்⁴ருவம் ॥

அத்தியாயம்: 17 பாடல்: 19

மூடக்கொள் கையின்பற்று தலால்தன்னைத்
துன்புறுத் தியோபிறரை அழித்தல்பொருட்டோ ।
எத்தவமா னதுசெய்யப் படுகின்றதோ
அத்தவம் தாமஸமென்று கூறப்படுகிறதே ॥

मूढग्राहेणात्मनो यत्पीडया क्रियते तपः ।
மூட⁴க்³ராஹேணாத்மநோ யத்பீட³யா க்ரியதே தப: ।
परस्योत्सादनार्थं वा तत्तामसमुदाहृतम् ॥
பரஸ்யோத்ஸாத³நார்த²ம் வா தத்தாமஸமுதா³ஹ்ருதம் ॥

அத்தியாயம்: 17 பாடல்: 20

அளிப்பது கடமையாமென எத்தானமுரிய
இடம், காலம், பாத்திரத்தி லும்திரும்ப- ।
உதவஇயலா தவருக்களிக் குமத்தானம்
ஸாத்வீகமான தென்றுகருதப் படுகின்றதே ॥

दातव्यमिति यद्दानं दीयतेऽनुपकारिणे ।
தா³தவ்யமிதி யத்³தா³நம் தீ³யதேऽநுபகாரிணே ।
देशे काले च पात्रे च तद्दानं सात्त्विकं स्मृतम् ॥
தே³ஶே காலே ச பாத்ரே ச தத்³தா³நம் ஸாத்த்விகம் ஸ்ம்ரு'தம் ॥

அத்தியாயம்: 17 பாடல்: 21

மற்றும்பிரதியு பகாரத்தைக் கருதியும்
பலனைஆலோசித் தும்மனவருத் தத்தோடும் ।
எத்தானம் அளிக்கப் படுகின்றதோ
அத்தானம் ராஜஸமெனப் படுகின்றதே ॥

यत्तु प्रत्युपकारार्थं फलमुद्दिश्य वा पुनः ।
யத்து ப்ரத்யுபகாரார்த²ம் ப²லமுத்³தி³ஶ்ய வா புந: ।
दीयते च परिक्लिष्टं तद्दानं राजसं स्मृतम् ॥
தீ³யதே ச பரிக்லிஷ்டம் தத்³தா³நம் ராஜஸம் ஸ்ம்ரு'தம் ॥

**அத்தியாயம்: 17 பாடல்: 22**

தகுதியில்லா இடத்திலும் காலத்திலும்
தகுதியிலாம னிதர்களுக் குப்பூஜையின்றி ।
எத்தானமி கழ்ச்சியுடன் தரப்படுகிறதோ
அத்தானம் தாமஸமெனப் படுகின்றதே ॥

अदेशकाले यद्दानमपात्रेभ्यश्च दीयते ।
அதே³ஶகாலே யத்³தா³நமபாத்ரேப்⁴யஶ்ச தீ³யதே ।
असत्कृतमवज्ञातं तत्तामसमुदाहृतम् ॥
அஸத்க்ரு'தமவஜ்ஞாதம் தத்தாமஸமுதா³ஹ்ரு'தம் ॥

**அத்தியாயம்: 17 பாடல்: 23**

"ஓம் தத் ஸத்" என்பதுபிரம் மத்தினுடைய
மூன்றுவிதப் பெயராய் எண்ணப்படுகிறது ।
[1]அதனால் துவக்கத்திலேயே மறை-வேள்விகளும்
அந்தணர்களும் படைக்கப் பட்டார்கள் ॥

[ 1 அந்த பெயர்களினால் ]

ॐतत्सदिति निर्देशो ब्रह्मणस्त्रिविधः स्मृतः ।
ஓம்தத்ஸதி³தி நிர்தே³ஶோ ப்³ரஹ்மணஸ்த்ரிவித:⁴ ஸ்ம்ரு'த: ।
ब्राह्मणास्तेन वेदाश्च यज्ञाश्च विहिताः पुरा ॥
ப்³ராஹ்மணாஸ்தேந வேதா³ஶ்ச யஜ்ஞாஶ்ச விஹிதா: புரா ॥

**அத்தியாயம்: 17 பாடல்: 24**

ஆதலால்மறை யோதுபவர்க ளால்மறையில்
விதித்துள்ள வேள்விகளும் தானங்களும் ।
தவங்கஎனும் செயல்களும் எப்பொழுதும்
“ஓம்”என்று உச்சரித்தே துவங்குகின்றனவே ॥

**तस्मादोमित्युदाहृत्य यज्ञदानतपःक्रियाः ।**
தஸ்மாதோ³மித்யுதா³ஹ்ரு’த்ய யஜ்ஞதா³நதப:க்ரியா: ।
**प्रवर्तन्ते विधानोक्ताः सततं ब्रह्मवादिनाम् ॥**
ப்ரவர்தந்தே விதா⁴நோக்தா: ஸததம் ப்³ரஹ்மவாதி³நாம் ॥

**அத்தியாயம்: 17 பாடல்: 25**

முக்தியைவிரும் புபவர்களால் வேள்விகள்
தவங்கஎனும் செயல்களும் பலவிதமான ।
தானங்களும் பலனைச்சிந் திக்காமலேயே
[1]“தத்”என்று கூறியேசெய்யப் படுகின்றதே ॥

[ 1 தத் = “ஓம் தத் ஸத்” என்பதிலுள்ள தத் ]

**तदित्यनभिसन्धाय फलं यज्ञतपःक्रियाः ।**
ததி³த்யநபி⁴ஸந்தா⁴ய ப²லம் யஜ்ஞதப:க்ரியா: ।
**दानक्रियाश्च विविधाः क्रियन्ते मोक्षकाङ्क्षिभिः ॥**
தா³நக்ரியாஶ்ச விவிதா:⁴ க்ரியந்தே மோக்ஷகாங்க்ஷிபி⁴: ॥

அத்தியாயம்: 17 பாடல்: 26

“ஸத்”என்றஇச் சொல்உண்மை யெனும்பொருளிலும்
நன்மையெனும் பொருளிலும் பயன்படுகிறது ।
அர்ஜுனா!அவ் விதமேமங் களச்செயலிலும்
“ஸத்”எனும்இச் சொல்உபயோ கப்படுகிறதே ॥

सद्भावे साधुभावे च सदित्येतत्प्रयुज्यते ।
ஸத்³பா⁴வே ஸாது⁴பா⁴வே ச ஸதி³த்யேதத்ப்ரயுஜ்யதே ।
प्रशस्ते कर्मणि तथा सच्छब्दः पार्थ युज्यते ॥
ப்ரஶஸ்தே கர்மணி ததா² ஸச்ச²ப்³த:³ பார்த² யுஜ்யதே ॥

அத்தியாயம்: 17 பாடல்: 27

வேள்வியிலும் தவத்திலும் தானத்திலும்
நிலைநிற்றல் “ஸத்”தென்று சொலப்படுகிறது ।
மேலும்அதன் பொருட்டாய்ச் செய்யப்படும்
செயல்களும் “ஸத்”தென்றே சொலப்படுகிறது ॥

यज्ञे तपसि दाने च स्थितिः सदिति चोच्यते ।
யஜ்ஞே தபஸி தா³நே ச ஸ்தி²தி: ஸதி³தி சோச்யதே ।
कर्म चैव तदर्थीयं सदित्येवाभिधीयते ॥
கர்ம சைவ தத³ர்தீ²யம் ஸதி³த்யேவாபி⁴தீ⁴யதே ॥

**அத்தியாயம்: 17 பாடல்: 28**

சிரத்தையின்றிச் செய்தவேள்வி யும்தானமும்-
இயற்றியதவ மும்பிறசெ யல்களும் ।
எவையோஅவை “அஸத்”தென்றுகூறப் படுகிறதே,
இம்மைக்கும் மறுமைக்குமவை பயனில்லையே ॥

**अश्रद्धया हुतं दत्तं तपस्तप्तं कृतं च यत् ।**
அஶ்ரத்$^{3}$த$^{4}$யா ஹுதம் த$^{3}$த்தம் தபஸ்தப்தம் க்ரு’தம் ச யத் ।
**असदित्युच्यते पार्थ न च तत्प्रेत्य नो इह ॥**
அஸதி$^{3}$த்யுச்யதே பார்த$^{2}$ ந ச தத்ப்ரேத்ய நோ இஹ॥





## ஓம் தத் ஸத்

இவ்விதம் ஸ்ரீமத் பகவத்கீதையில், உபநிஷத்தில்,
பிரம்மவித்யையில், யோகஶாஸ்த்திரத்தில்,
ஸ்ரீகிருஷ்ணருக்கும் அர்ஜுனனுக்கும்
இடைப்பட்ட நல்வாதத்தில்,

## “மூவிதநம்பிக்கையைப் பகுத்தறிதல்”

எனும் இப்பதினேழாம் அத்தியாயம்

சின்மயதாசன் கிருஷ்ணாத்மாநந்தனால்
தமிழ்ப்பாடல்களாய் இயற்றப்பட்டது
இனிதே இறையருளால் நிறைவுற்றதே. ॥

### ॐ तत्सदिति श्रीमद्भगवद्गीतासूपनिषत्सु

ஓம் தத்ஸதி$^3$தி ஸ்ரீமத்$^3$ப$^4$க$^3$வத்$^3$கீ$^3$தாஸூபநிஷத்ஸு

### ब्रह्मविद्यायां योगशास्त्रे

ப்$^3$ரஹ்மவித்$^3$யாயாம் யோக$^3$ஶாஸ்த்ரே

### श्रीकृष्णार्जुनसंवादे

ஸ்ரீக்ரு'ஷ்ணார்ஜுநஸம்வாதே$^3$

### श्रद्धात्रयविभागयोगो नाम

ஶ்ரத்$^3$தா$^4$த்ரயவிபா$^4$க$^3$யோகோ$^3$ நாம

### सप्तदशोऽध्यायः ॥

ஸப்தத$^3$ஶோऽத்$^4$யாய: ॥

## ஓம் ஸ்ரீபரமாத்மனே நம:

# ஸ்ரீமத் பகவத்கீதை
# श्रिमद्भगवद्गगीता

## "பதினெட்டாம் அத்தியாயம்"
## "முக்தித்துறவு"

**अथाष्टादशोऽध्यायः ।**
**அதா²ஷ்டாத³ஶோऽத்⁴யாய: ।**

**मोक्षसंन्यासयोगः**
**மோக்ஷஸம்ந்யாஸயோக³:**

# ஹரி: ஓம்!



**“நந்ததி நந்ததி நந்தத் யேவ” – பஜகோவிந்தம்**

எல்லாதர்மத் தையும்நன்றாய்த் துறந்தும்
என்னொருவனி டத்திலேயேஅடைக் கலமாவாய் ।
எல்லாப்பாவங் களிலிருந்தும் உனைநான்
விடுவிப்பேன் நீவருத்தப்பட வேண்டாம் ॥ [ ப.கீ. 18. 66 ]

**அத்தியாயம்: 18 பாடல்: 01**

**"அர்ஜுனன் புகன்றான்"**
புலன்களையாள் பவரே!கேசியை அழித்தவரே!
பெருந்தோளாய்! சந்நியாசத்தின் பொருளையும் ।
தியாகத்தின் பொருளையும் உள்ளபடியே
தனித்தனியாய் அறியவிரும் புகின்றேன் ॥

अर्जुन उवाच ।
**அர்ஜுந உவாச ।**
संन्यासस्य महाबाहो तत्त्वमिच्छामि वेदितुम् ।
ஸம்ந்யாஸஸ்ய மஹாபா³ஹோ தத்த்வமிச்சா²மி வேதி³தும் ।
त्यागस्य च हृषीकेश पृथक्केशिनिषूदन ॥
த்யாக³ஸ்ய ச ஹ்ரு’ஷீகேஶ ப்ரு’த²க்கேஶிநிஷூத³ந ॥

**அத்தியாயம்: 18 பாடல்: 02**

**"ஸ்ரீபகவான் பகர்ந்தார்"**
ஆசையால்தோன் றும்செயல்களைத் துறத்தலே
சன்னியாசம்என் றறிகிறார்கள் ஞானிகள் ।
எல்லாச்செயல் பலன்களையும் துறத்தலை
அறிவுடையோர் தியாகமெனப் பகர்கின்றனரே ॥

श्रीभगवानुवाच ।
**ஸ்ரீப⁴க³வாநுவாச ।**
काम्यानां कर्मणां न्यासं संन्यासं कवयो विदुः ।
காம்யாநாம் கர்மணாம் ந்யாஸம் ஸம்ந்யாஸம் கவயோ விது³: ।
सर्वकर्मफलत्यागं प्राहुस्त्यागं विचक्षणाः ॥
ஸர்வகர்மப²லத்யாக³ம் ப்ராஹுஸ்த்யாக³ம் விசக்ஷணா: ॥

**அத்தியாயம்: 18 பாடல்: 03**

விவேகிகள்சிலர் செயல்கள் தோஷமுள்ளவை
விடத்தகுந்தவை அவைஎன்றும், வேறுசிலரோ ।
வேள்விதானதவச் செயல்களை வேதமறிந்தோர்
விடத்தக்கவை யல்லயெனப் பகர்கின்றனரே ॥

त्याज्यं दोषवदित्येके कर्म प्राहुर्मनीषिणः ।
த்யாஜ்யம் தோ³ஷவதி³த்யேகே கர்ம ப்ராஹுர்மநீஷிண: ।
यज्ञदानतपःकर्म न त्याज्यमिति चापरे ॥
யஜ்ஞதா³நதப:கர்ம ந த்யாஜ்யமிதி சாபரே ॥

**அத்தியாயம்: 18 பாடல்: 04**

பரதகுலஉத் தமனே!அந்தத் தியாகத்தின்
விஷயத்திலே யென்நிச்சயத் தினைக்கேள் ।
மனிதரிலே [1]மாணிக்கமே! தியாகமானது
மூவிதமாக நன்றாய்க்கூறப் பட்டுள்ளதே ॥

[ 1 புருஷவ்யாக்ர: = மனிதரில் மாணிக்கமே / சிறந்தோனே ]

निश्चयं शृणु मे तत्र त्यागे भरतसत्तम ।
நிஶ்சயம் ஶ்ரு'ணு மே தத்ர த்யாகே³ ப⁴ரதஸத்தம ।
त्यागो हि पुरुषव्याघ्र त्रिविधः सम्प्रकीर्तितः ॥
த்யாகோ³ ஹி புருஷவ்யாக்⁴ர த்ரிவித:⁴ ஸம்ப்ரகீர்தித: ॥

**அத்தியாயம்: 18 பாடல்: 05**

வேள்விதானம் தவமாகிய இச்செயல்கள்
விடத்தகுந் தவையல்ல,அவை இயற்றப்பட ।
வேண்டியவையே! வேள்வியும் தானதவமும்
விவேகிகளுக் குமனத்தூய் மையளிப்பவையாம் ॥

**यज्ञदानतपःकर्म न त्याज्यं कार्यमेव तत् ।**
யஜ்ஞதா³நதப:கர்ம ந த்யாஜ்யம் கார்யமேவ தத் ।
**यज्ञो दानं तपश्चैव पावनानि मनीषिणाम् ॥**
யஜ்ஞோ தா³நம் தபஶ்சைவ பாவநாநி மநீஷிணாம்॥

**அத்தியாயம்: 18 பாடல்: 06**

பார்த்தனே! ஆனாலிச்செயல் களெல்லாம்
பற்றற்றும் பலனைத்துறந் துவிட்டும் ।
இயற்றப் படவேண்டியவை களென்பது
எனதுதீர் மானமானஉயர்ந் தகருத்தாம் ॥

**एतान्यपि तु कर्माणि सङ्गं त्यक्त्वा फलानि च ।**
ஏதாந்யபி து கர்மாணி ஸங்க³ம் த்யக்த்வா ப²லாநி ச ।
**कर्तव्यानीति मे पार्थ निश्चितं मतमुत्तमम् ॥**
கர்தவ்யாநீதி மே பார்த² நிஶ்சிதம் மதமுத்தமம் ॥

அத்தியாயம்: 18 பாடல்: 07

நித்தியமாய்ச் செய்யப்பட வேண்டியதான
செயல்களைத் துறத்தலென் பதுதகாது ।
தெளிவின்மையா லதனுடைய துறவானது
தாமசமான தெனப்பகரப் படுகின்றதே ॥

नियतस्य तु संन्यासः कर्मणो नोपपद्यते ।
நியதஸ்ய து ஸம்ந்யாஸ: கர்மணோ நோபபத்³யதே ।
मोहात्तस्य परित्यागस्तामसः परिकीर्तितः ॥
மோஹாத்தஸ்ய பரித்யாக³ஸ்தாமஸ: பரிகீர்தித: ॥

அத்தியாயம்: 18 பாடல்: 08

துக்கமெனக் கருதியுடல் வருத்தத்தின்-
பயத்தாலெச் செயலைத்தியா கம்செய்கிறானோ ।
இராஜஸமான தியாகத்தைச் செய்துவிட்டு
தியாகத்தின் பலனைஅவன் அடைவதில்லேயே ॥

दुःखमित्येव यत्कर्म कायक्लेशभयात्त्यजेत् ।
து:³க²மித்யேவ யத்கர்ம காயக்லேஶப⁴யாத்த்யஜேத் ।
स कृत्वा राजसं त्यागं नैव त्यागफलं लभेत् ॥
ஸ க்ரு'த்வா ராஜஸம் த்யாக³ம் நைவ த்யாக³ப²லம் லபே⁴த் ॥

அத்தியாயம்: 18 பாடல்: 09

அர்ஜுனா! செய்யத்தக்கதே என்றுபற்றையும்
பலனையும் விட்டுவிட்டு எந்நித்தியச்- ।
செயல்கள் செய்யப்படு கின்றனவோ,
அத்தியாகம்ஸாத் வீகமெனப் படுகின்றதே ॥

कार्यमित्येव यत्कर्म नियतं क्रियतेऽर्जुन ।
கார்யமித்யேவ யத்கர்ம நியதம் க்ரியதேऽர்ஜுந ।
सङ्गं त्यक्त्वा फलं चैव स त्यागः सात्त्विको मतः ॥
ஸங்க³ம் த்யக்த்வா ப²லம் சைவ ஸ த்யாக:³ ஸாத்த்விகோ மத: ॥

அத்தியாயம்: 18 பாடல்: 10

சத்துவம் மேலோங்கியும்பேர றிவாளனாயும்
சந்தேகம் அற்றவனுமான தியாகியானவன் ।
துன்பச் செயல்களைவெறுக் கின்றதில்லை
இன்பச் செயல்களைவிரும் புவதுமில்லையே ॥

न द्वेष्ट्यकुशलं कर्म कुशले नानुषज्जते ।
ந த்³வேஷ்ட்யகுஶலம் கர்ம குஶலே நாநுஷஜ்ஜதே ।
त्यागी सत्त्वसमाविष्टो मेधावी छिन्नसंशयः ॥
த்யாகீ³ ஸத்த்வஸமாவிஷ்டோ மேதா⁴வீ சி²ந்நஸம்ஶய:॥

**அத்தியாயம்: 18 பாடல்: 11**

உடலபிமான முள்ளஜீவனால் செயல்கள்
அனைத்தையும் முழுமையாய் விடவியலாதே ।
ஆனாலெவன் கர்மபலனைத் துறந்தவனோ
அவன்தியாகி என்றழைக் கப்படுகிறானே ॥

**न हि देहभृता शक्यं त्यक्तुं कर्माण्यशेषतः ।**
ந ஹி தே3ஹப்4ரு’தா ஶக்யம் த்யக்தும் கர்மாண்யஶேஷத: ।
**यस्तु कर्मफलत्यागी स त्यागीत्यभिधीयते ॥**
யஸ்து கர்மப2லத்யாகீ3 ஸ த்யாகீ3த்யபி4தீ4யதே ॥

**அத்தியாயம்: 18 பாடல்: 12**

தீயதெனநல் லதென[1]கலந்த தெனமூவிதமாய்
செயல்பலன் தியாகம்செய் யாதவனுக்கு ।
இறப்பிற்குப் [2]பினுண்டாகிற தானால்துறந்த
துறவிக்கெப் பொழுதுமுண்டா வதிலையே ॥

[ 1 மிஶ்ரம் = கலந்ததென = நல்லதும் தீயதும் இரண்டும் கலந்ததென
2 பின் + உண்டாகிறது + ஆனால் ]

**अनिष्टमिष्टं मिश्रं च त्रिविधं कर्मणः फलम् ।**
அநிஷ்டமிஷ்டம் மிஶ்ரம் ச த்ரிவித4ம் கர்மண: ப2லம் ।
**भवत्यत्यागिनां प्रेत्य न तु संन्यासिनां क्वचित् ॥**
ப4வத்யத்யாகி3நாம் ப்ரேத்ய ந து ஸம்ந்யாஸிநாம் க்வசித் ॥

அத்தியாயம்: 18 பாடல்: 13

பெருந்தோளா! செயல்களின்முடி வையும்எல்லாச்
செயல்களும் [1]நிறைவேறுவதன் பொருட்டும் ।
சாங்கியதத் துவத்திலேசொல்லப் பட்டுள்ள
இவ்வைந்து காரணங்களை என்னிடம்அறிவாய் ॥

[ 1 சித்தயே = நிறைவின் பொருட்டு = பூர்த்தியின் பொருட்டு ]

पञ्चैतानि महाबाहो कारणानि निबोध मे ।
பஞ்சைதாநி மஹாபா³ஹோ காரணாநி நிபோ³த⁴ மே ।
साङ्ख्ये कृतान्ते प्रोक्तानि सिद्धये सर्वकर्मणाम् ॥
ஸாங்க்²யே க்ரு'தாந்தே ப்ரோக்தாநி ஸித்³த⁴யே ஸர்வகர்மணாம் ॥

अत्तियायम्: 18 பாடல்: 14

[1]இருப்பிடம் அவ்விதமே [2]செய்பவனும்
[3]பலவிதப் புலன்கருவி களும்வெவ்வேறான ।
[4]பலப்பலச் செயல்களும் இவற்றினுள்
[5]தெய்வமும் ஐந்தாவது காரணமாகும் ॥

[ 1 அதிஷ்டானம், 2 கர்த்தா, 3 கரணம், 4 ப்ருதக்சேஷ்டா, 5 தைவம் ]

अधिष्ठानं तथा कर्ता करणं च पृथग्विधम् ।
அதி⁴ஷ்டா²நம் ததா² கர்தா கரணம் ச ப்ரு'த²க்³வித⁴ம் ।
विविधाश्च पृथक्चेष्टा दैवं चैवात्र पञ्चमम् ॥
விவிதா⁴ஸ்ச ப்ரு'த²க்சேஷ்டா தை³வம் சைவாத்ர பஞ்சமம் ॥

**அத்தியாயம்: 18 பாடல்: 15**

மனிதனுடலா லும்மொழியாலும் மனதினாலும்
நேர்மையானதா யல்லது,மாறா னதாயுள்ள ।
எந்தச்செயல்களை நன்றாயாரம் பிக்கின்றானோ
அதற்கிவை ஐந்தும்காரண மாகின்றனவே ॥

शरीरवाङ्मनोभिर्यत्कर्म प्रारभते नरः ।
ஶரீரவாங்மநோபி⁴ர்யத்கர்ம ப்ராரப⁴தே நர: ।
न्याय्यं वा विपरीतं वा पञ्चैते तस्य हेतवः ॥
ந்யாய்யம் வா விபரீதம் வா பஞ்சைதே தஸ்ய ஹேதவ:॥

**அத்தியாயம்: 18 பாடல்: 16**

அந்தஇவ் ஐந்துமிவ்வித மிருக்க,ஆனால்
[1]அதுமட்டு மானஆத்மாவை, எவன்செய்பவனாய் ।
அறிகிறானோ; [2]சீர்திருத்தப் பெறாஅறிவுடையோன்
அறியாமையினா லதைஅறி கிறதில்லையே ॥

[ 1 கேவலம் = அதுமட்டுமான = ஏகம் = ஒன்றான 2 அக்ருதபுத்தி = சீர்திருத்தப் பெறா அறிவு ]

तत्रैवं सति कर्तारमात्मानं केवलं तु यः ।
தத்ரைவம் ஸதி கர்தாரமாத்மாநம் கேவலம் து ய: ।
पश्यत्यकृतबुद्धित्वान्न स पश्यति दुर्मतिः ॥
பஶ்யத்யக்ரு'தபு³த்³தி⁴த்வாந்ந ஸ பஶ்யதி து³ர்மதி: ॥

**அத்தியாயம்: 18 பாடல்: 17**

யாருக்குநான் செய்கிறேனெனு மெண்ணமில்லையோ
யாருக்கு புத்தியில்பற் றுதலில்லையோஅவன் ।
இவ்வுயிர்களைக் கொன்றாலும் கொல்கிறவன்-
அல்லன்பந் தப்படுபவனு மல்லவனாமவன் ॥

**यस्य नाहङ्कृतो भावो बुद्धिर्यस्य न लिप्यते ।**
யஸ்ய நாஹங்க்ரு’தோ பா⁴வோ பு³த்³தி⁴ர்யஸ்ய ந லிப்யதே ।
**हत्वाऽपि स इमाँल्लोकान्न हन्ति न निबध्यते ॥**
ஹத்வாऽபி ஸ இமாம்ல்லோகாந்ந ஹந்தி ந நிப³த்⁴யதே ॥

**அத்தியாயம்: 18 பாடல்: 18**

செயலிற்குத் தூண்டுதல் மூவகைத்தாம்
அறிவுமறி படும்பொருளு மறிபவனுமென; ।
செயலிற்கு இருப்பிடம் மூவகையாம்
செயல்கருவி, பொருட்கள், செய்பவனென ॥

**ज्ञानं ज्ञेयं परिज्ञाता त्रिविधा कर्मचोदना ।**
ஜ்ஞாநம் ஜ்ஞேயம் பரிஜ்ஞாதா த்ரிவிதா⁴ கர்மசோத³நா ।
**करणं कर्म कर्तेति त्रिविधः कर्मसङ्ग्रहः ॥**
கரணம் கர்ம கர்தேதி த்ரிவித:⁴ கர்மஸங்க்³ரஹ: ॥

**அத்தியாயம்: 18 பாடல்: 19**

அறிவும்செய லும்செய்பவனும் மூவிதமாம்
குணபேதத் தால்,ஸாங்கியதத் துவத்தில் ।
குணங்களைப் பற்றிக்கூறப்பட் டுள்ளது;
அவைகளையும் முறையாயுள்ளபடி கேட்பாயாக ॥

**ज्ञानं कर्म च कर्ता च त्रिधैव गुणभेदतः ।**
ஜ்ஞாநம் கர்ம ச கர்தா ச த்ரிதை⁴வ கு³ணபே⁴த³த: ।
**प्रोच्यते गुणसङ्ख्याने यथावच्छृणु तान्यपि ॥**
ப்ரோச்யதே கு³ணஸங்க்²யாநே யதா²வச்ச்²ரு’ணு தாந்யபி ॥

**அத்தியாயம்: 18 பாடல்: 20**

வெவ்வேறாயுள்ள எல்லாவஸ்துக் களிலும்
மாறாததாயிருக் கும்அழியாத தாயும் ।
ஒன்றாயுமுள்ள சொரூபத்தை யெதனால்
அறிகிறானோ, அவ்வறிவைசாத் வீகமெனஅறி ॥

**सर्वभूतेषु येनैकं भावमव्ययमीक्षते ।**
ஸர்வபூ⁴தேஷு யேநைகம் பா⁴வமவ்யயமீக்ஷதே ।
**अविभक्तं विभक्तेषु तज्ज्ञानं विद्धि सात्त्विकम् ॥**
அவிப⁴க்தம் விப⁴க்தேஷு தஜ்ஜ்ஞாநம் வித்³தி⁴ ஸாத்த்விகம் ॥

**அத்தியாயம்: 18 பாடல்: 21**

எந்தஅறிவு எல்லாவுடல் களிலுமுள்ள
உயிர்களை பலப்பலவெவ் வேறுவிதமான ।
ஜீவர்களாய்த் தனித்தனியாய் அறிகின்றதோ
அந்தஅறிவை ராஜஸமென்று அறிவாயாக ॥

**पृथक्त्वेन तु यज्ज्ञानं नानाभावान्पृथग्विधान् ।**
ப்ரு'த²க்த்வேந து யஜ்ஜ்ஞாநம் நாநாபா⁴வாந்ப்ரு'த²க்³விதா⁴ந் ।
**वेत्ति सर्वेषु भूतेषु तज्ज्ञानं विद्धि राजसम् ॥**
வேத்தி ஸர்வேஷு பூ⁴தேஷு தஜ்ஜ்ஞாநம் வித்³தி⁴ ராஜஸம் ॥

**அத்தியாயம்: 18 பாடல்: 22**

எந்தஅறிவு எவ்வுடலை எல்லாமாயெண்ணிப்-
பற்றிக்கொண் டும்யுக்தி இல்லாதும் ।
உண்மைப்பொ ருளைஅறியாது மற்பமாயுள்ள
அந்தஅறிவு தாமஸமெனச் சொல்லப்படுகிறதே ॥

**यत्तु कृत्स्नवदेकस्मिन्कार्ये सक्तमहैतुकम् ।**
யத்து க்ரு'த்ஸ்நவதே³கஸ்மிந்கார்யே ஸக்தமஹைதுகம் ।
**अतत्त्वार्थवदल्पं च तत्तामसमुदाहृतम् ॥**
அதத்த்வார்த²வத³ல்பம் ச தத்தாமஸமுதா³ஹ்ரு'தம் ॥

**அத்தியாயம்: 18 பாடல்: 23**

பயனில்விருப் பமற்றவனாய் பற்றின்றி
விருப்புவெறுப் பின்றியேஎந்த நித்தியச்- ।
செயல்களானது செய்யப்படு கின்றதோ
அதுஸாத்வீகம் என்றுபகரப் படுகின்றதே ॥

नियतं सङ्गरहितमरागद्वेषतः कृतम् ।
நியதம் ஸங்க³ரஹிதமராக³த்³வேஷத: க்ரு'தம் ।
अफलप्रेप्सुना कर्म यत्तत्सात्त्विकमुच्यते ॥
அப²லப்ரேப்ஸுநா கர்ம யத்தத்ஸாத்த்விகமுச்யதே ॥

**அத்தியாயம்: 18 பாடல்: 24**

ஆனாலெந்தச் செயலாசைவயப் பட்டவனாலோ
அல்லதுஅகங் காரத்துடன்கூடி யவனாலோ ।
அதிகமுயற்சி யோடுசெய்யப் படுகின்றதோ
அதுராஜஸம் என்றுசொல்லப் படுகின்றதே ॥

यत्तु कामेप्सुना कर्म साहङ्कारेण वा पुनः ।
யத்து காமேப்ஸுநா கர்ம ஸாஹங்காரேண வா புந: ।
क्रियते बहुलायासं तद्राजसमुदाहृतम् ॥
க்ரியதே ப³ஹுலாயாஸம் தத்³ராஜஸமுதா³ஹ்ரு'தம் ॥

**அத்தியாயம்: 18 பாடல்: 25**

எச்செயல் பலனையும் நஷ்டத்தையும்
பிறர்துன்பத் தையும்திறமையையும் யோசியாமல் ।
மயக்கத்தால் துவங்கப்படு கின்றதோ
அச்செயல் தாமஸமெனபகரப் பட்டுளதே ॥

**अनुबन्धं क्षयं हिंसामनपेक्ष्य च पौरुषम् ।**
அநுப$^3$ந்த$^4$ம் க்ஷயம் ஹிம்ஸாமநபேக்ஷ்ய ச பௌருஷம் ।
**मोहादारभ्यते कर्म यत्तत्तामसमुच्यते ॥**
மோஹாதா$^3$ரப்$^4$யதே கர்ம யத்தத்தாமஸமுச்யதே ॥

**அத்தியாயம்: 18 பாடல்: 26**

பற்றைவிட் டவனும்நானென் பதைவிட்டவனும்
உறுதியும் உற்சாகமும் உடையவனும் ।
வெற்றிதோல் வியில்மாறுதல் அற்றவனாய்-
[1]உள்ளவன் சாத்வீகனென பகரப்படுகிறான் ॥

[ 1 உள்ளவன் = உள்ள கர்த்தாவானவன் ]

**मुक्तसङ्गोऽनहंवादी धृत्युत्साहसमन्वितः ।**
முக்தஸங்கோ$^3$஽நஹம்வாதீ$^3$ த்$^4$ரு’த்யுத்ஸாஹஸமந்வித: ।
**सिद्ध्यसिद्ध्योर्निर्विकारः कर्ता सात्त्विक उच्यते ॥**
ஸித்$^3$த்$^4$யஸித்$^3$த்$^4$யோர்நிர்விகார: கர்தா ஸாத்த்விக உச்யதே ॥

அத்தியாயம்: 18 பாடல்: 27

ஆசையுடையோன் செயல்பலனை வேண்டுவோன்
பேராசையுடையோன் துன்புறுத்தும் தன்மையோன் ।
தூய்மையற்றோன் மகிழ்வுசோக மும்கூடியோன்
[1]செயல்செய்வோன் ராஜஸனெனப் படுகின்றானே ॥

[ 1 கர்த்தா = செயல்செய்வோன் = ‘செய்பவன் நான்’ என்ற எண்ணமுடையவன் ]

रागी कर्मफलप्रेप्सुर्लुब्धो हिंसात्मकोऽशुचिः ।
ராகீ³ கர்மப²லப்ரேப்ஸுர்லுப்³தோ⁴ ஹிம்ஸாத்மகோऽஶுசி: ।
हर्षशोकान्वितः कर्ता राजसः परिकीर्तितः ॥
ஹர்ஷஶோகாந்வித: கர்தா ராஜஸ: பரிகீர்தித: ॥

அத்தியாயம்: 18 பாடல்: 28

நிலையற்றமன முடையோன்பண் படாஅறிவுளோன்
வணக்கமற்றோன் வஞ்சகன் பொல்லாதவன் ।
சோம்பல்சோக முடன்காலத்தை வீணாக்கும்
அக்கர்த்தாதா மஸனெனப் படுகின்றானே ॥

अयुक्तः प्राकृतः स्तब्धः शठो नैष्कृतिकोऽलसः ।
அயுக்த: ப்ராக்ரு’த: ஸ்தப்³த:⁴ ஶடோ² நைஷ்க்ரு’திகோऽலஸ: ।
विषादी दीर्घसूत्री च कर्ता तामस उच्यते ॥
விஷாதீ³ தீ³ர்க⁴ஸூத்ரீ ச கர்தா தாமஸ உச்யதே ॥

**அத்தியாயம்: 18 பாடல்: 29**

தனஞ்ஜயனே! குணங்களுக் கேற்றவாறு
[1]புத்தியினுடைய மற்று[2]முறுதி யினுடைய ।
மூவிதமானவேறு பாட்டைமீத மின்றியே
தனித்தனியாய்க் கூறப்போவதைக் கேளுதி ॥

[ 1 புத்தி = அறிவு; 2 த்ருதி = உறுதி ]

**बुद्धेर्भेदं धृतेश्चैव गुणतस्त्रिविधं शृणु ।**
பு$^{3}$த்$^{3}$தே$^{4}$ர்பே$^{4}$த$^{3}$ம் த்$^{4}$ரு’தேஶ்சைவ கு$^{3}$ணதஸ்த்ரிவித$^{4}$ம் ஶ்ரு’ணு ।
**प्रोच्यमानमशेषेण पृथक्त्वेन धनञ्जय ॥**
ப்ரோச்யமாநமஶேஷேண ப்ரு’த$^{2}$க்த்வேந த$^{4}$நஞ்ஜய॥

**அத்தியாயம்: 18 பாடல்: 30**

அர்ஜுனா!கர்ம வழியையும்முக்தி வழியையும்
[1]காரிய[2]அகாரி யத்தையும்பயா பயத்தையும் ।
பந்தமோட்சத்தை யும்எந்தபுத் தியானது
அறிகின்றதோ அப்புத்திஸாத் வீகமானது ॥

[ 1 காரியம் = செய்யத்தக்கது; 2 அகாரியம் = செய்யதகாதது ]

**प्रवृत्तिं च निवृत्तिं च कार्याकार्ये भयाभये ।**
ப்ரவ்ரு’த்திம் ச நிவ்ரு’த்திம் ச கார்யாகார்யே ப$^{4}$யாப$^{4}$யே ।
**बन्धं मोक्षं च या वेत्ति बुद्धिः सा पार्थ सात्त्विकी ॥**
ப$^{3}$ந்த$^{4}$ம் மோக்ஷம் ச யா வேத்தி பு$^{3}$த்$^{3}$தி:$^{4}$ ஸா பார்த$^{2}$ ஸாத்த்விகீ ॥

**அத்தியாயம்: 18 பாடல்: 31**

அர்ஜுனா!எப் புத்தியினாலே தர்மத்தையும்
அதர்மத்தை யும்செய்யத் தகுந்ததையும் ।
[1]அகற்றவேண் டியதையும் [2]உள்ளபடியல்லாது
அறிகின்றானோ அப்புத்தி ராஜஸமானதே ॥

[ 1 அகாரியம் = அகற்ற / விலக்க வேண்டியதை; 2 அயதாவத் = உள்ளபடியல்லாது = மாறாக ]

यया धर्ममधर्मं च कार्यं चाकार्यमेव च ।
யயா த⁴ர்மமத⁴ர்மம் ச கார்யம் சாகார்யமேவ ச ।
अयथावत्प्रजानाति बुद्धिः सा पार्थ राजसी ॥
அயதா²வத்ப்ரஜாநாதி பு³த்³தி:⁴ ஸா பார்த² ராஜஸீ ॥

**அத்தியாயம்: 18 பாடல்: 32**

அறியாமையிரு ளால்மறைக் கப்பட்டே
அதர்மத்தை தர்மமெனக் கருதியே ।
அனைத்துப்பொரு ளையும்வேறாய் அறிகின்றதோ
அந்தப்புத் தியானதுதாமஸ மானதாகுமே ॥

अधर्मं धर्ममिति या मन्यते तमसावृता ।
அத⁴ர்மம் த⁴ர்மமிதி யா மந்யதே தமஸாவ்ரு'தா ।
सर्वार्थान्विपरीतांश्च बुद्धिः सा पार्थ तामसी ॥
ஸர்வார்தா²ந்விபரீதாம்ஶ்ச பு³த்³தி:⁴ ஸா பார்த² தாமஸீ ॥

அத்தியாயம்: 18 பாடல்: 33

பார்த்தனே! ஒருநிலையான மனதால்நிலை-
பிறழாஉறு தியினால்மனப் பிராணன்புலன் ।
இவைகளின் செயல்களைத் தாங்குகிறானோ
அத்தைரியமான உறுதிசாத் வீகமானதாகுமே ॥

धृत्या यया धारयते मनःप्राणेन्द्रियक्रियाः ।
த்⁴ரு’த்யா யயா தா⁴ரயதே மந:ப்ராணேந்த்³ரியக்ரியா: ।
योगेनाव्यभिचारिण्या धृतिः सा पार्थ सात्त्विकी ॥
யோகே³நாவ்யபி⁴சாரிண்யா த்⁴ரு’தி: ஸா பார்த² ஸாத்த்விகீ ॥

அத்தியாயம்: 18 பாடல்: 34

பார்த்தனே! பற்றினால்பலனை வேண்டுவோன்
தர்மம்¹கா மம்பொருளிவைகளை யெல்லாம் ।
அர்ஜுனா! எந்தஉறுதியால் தாங்குகிறானோ
அந்தஉறுதி யானதுராஜஸமென் பதாகுமே ॥

[ 1 காமம் = ஆசை ]

यया तु धर्मकामार्थान्धृत्या धारयतेऽर्जुन ।
யயா து த⁴ர்மகாமார்தா²ந்த்⁴ருத்யா தா⁴ரயதேSர்ஜுந ।
प्रसङ्गेन फलाकाङ्क्षी धृतिः सा पार्थ राजसी ॥
ப்ரஸங்கே³ந ப²லாகாங்க்ஷீ த்⁴ரு’தி: ஸா பார்த² ராஜஸீ ॥

**அத்தியாயம்: 18 பாடல்: 35**

பார்த்தனே! துர்புத்தியுடை யோனெதனால்
பயத்தையும் தூக்கத்தையும் துயரத்தையும் ।
கவலையையும் கர்வத்தையும் விடுவதில்லையோ
அந்தஉறுதி யானதுதாமஸ மாகின்றதே ॥

**यया स्वप्नं भयं शोकं विषादं मदमेव च ।**
யயா ஸ்வப்நம் ப⁴யம் ஶோகம் விஷாத³ம் மத³மேவ ச ।
**न विमुञ्चति दुर्मेधा धृतिः सा पार्थ तामसी ॥**
ந விமுஞ்சதி து³ர்மேதா⁴ த்⁴ரு'தி: ஸா பார்த² தாமஸீ ॥

**அத்தியாயம்: 18 பாடல்: 36**

பரதகுலத்தில் சிறந்தோனே! மூவிதமான
சுகத்தைப்பற் றியிப்போதென் னிடம்கேளுதி ।
எதில்பயிற் சியால்சந்தோஷ மடைகின்றானோ
எதில்துக் கத்தின்முடிவையு மடைகின்றானோ.... ॥

**सुखं त्विदानीं त्रिविधं शृणु मे भरतर्षभ ।**
ஸுக²ம் த்விதா³நீம் த்ரிவித⁴ம் ஶ்ரு'ணு மே ப⁴ரதர்ஷப⁴ ।
**अभ्यासाद्रमते यत्र दुःखान्तं च निगच्छति ॥**
அப்⁴யாஸாத்³ரமதே யத்ர து:³கா²ந்தம் ச நிக³ச்ச²தி ॥

**அத்தியாயம்: 18 பாடல்: 37**

எந்தஒன்று துவக்கத்தில் விஷம்போன்றும்
எதன்முடிவி லமிர்தத்திற் கொப்பாயும் ।
நிலையானஆத்ம புத்தித்தெளி வில்தோன்றும்
அந்தசுகம் சாத்வீகமெனப் படுகின்றதே ॥

यत्तदग्रे विषमिव परिणामेऽमृतोपमम् ।
யத்தத³க்³ரே விஷமிவ பரிணாமேऽம்ரு'தோபமம் ।
तत्सुखं सात्त्विकं प्रोक्तमात्मबुद्धिप्रसादजम् ॥
தத்ஸுக²ம் ஸாத்த்விகம் ப்ரோக்தமாத்மபு³த்³தி⁴ப்ரஸாத³ஜம் ॥

**அத்தியாயம்: 18 பாடல்: 38**

புலன்பொறி களினுடைய இணக்கத்தால்
எந்தஒன்று முதலிலம்ரு தத்திற்கொப்பாய் ।
எந்தஒன்று முடிவிலேவிஷ மென்றாகிறதோ
அந்தசுகம் ராஜஸமெனப் படுகின்றதே ॥

विषयेन्द्रियसंयोगाद्यत्तदग्रेऽमृतोपमम् ।
விஷயேந்த்³ரிய ஸம்யோகா³த்³ யத்தத³க்³ரேऽ ம்ரு'தோபமம் ।
परिणामे विषमिव तत्सुखं राजसं स्मृतम् ॥
பரிணாமே விஷமிவ தத்ஸுக²ம் ராஜஸம் ஸ்ம்ரு'தம் ॥

**அத்தியாயம்: 18 பாடல்: 39**

எச்சுகம் தனக்குமுதலி லும்முடிவிலும்
மயக்கத்தையும் தூக்கத்தையும் சோம்பலையும் ।
கவனமின்மை யையும்தோற்று விக்குமோ
அச்சுகம்தாமஸ மென்றுபகரப் படுகிறதே ॥

**यदग्रे चानुबन्धे च सुखं मोहनमात्मनः ।**
யத³க்³ரே சாநுப³ந்தே⁴ ச ஸுக²ம் மோஹநமாத்மந: ।
**निद्रालस्यप्रमादोत्थं तत्तामसमुदाहृतम् ॥**
நித்³ராலஸ்யப்ரமாதோ³த்த²ம் தத்தாமஸமுதா³ஹ்ரு'தம் ॥

**அத்தியாயம்: 18 பாடல்: 40**

மாயையிலுதித்த இம்முக்குணங் களினின்றும்
முக்தியடைந்த தெதுவோஅவ் வுயிர்கள் ।
மனிதஉலகிலோ சுவர்க்கத் திலோஅல்லது
பிறதேவர்களுக் கிடையிலு மில்லையே ॥

**न तदस्ति पृथिव्यां वा दिवि देवेषु वा पुनः ।**
ந தத³ஸ்தி ப்ரு'தி²வ்யாம் வா தி³வி தே³வேஷு வா புந: ।
**सत्त्वं प्रकृतिजैर्मुक्तं यदेभिः स्यात्त्रिभिर्गुणैः ॥**
ஸத்த்வம் ப்ரக்ரு'திஜைர்முக்தம் யதே³பி:⁴ ஸ்யாத்த்ரிபி⁴ர்கு³ணை: ॥

**அத்தியாயம்: 18 பாடல்: 41**

எதிரிகளை வாட்டுபவனே! அந்தணக்ஷத்ரிய
வைசிய நான்காம்வர்ணத் தவர்க்குமே ।
ஸ்வபாவத் தினின்றுதித் தகுணங்களாலே
செயல்கள் வகுக்கப்பட் டிருக்கின்றனவே ॥

**ब्राह्मणक्षत्रियविशां शूद्राणां च परन्तप ।**
ப்[3]ராஹ்மணக்ஷத்ரியவிஶாம் ஶூத்[3]ராணாம் ச பரந்தப ।
**कर्माणि प्रविभक्तानि स्वभावप्रभवैर्गुणैः ॥**
கர்மாணி ப்ரவிப[4]க்தாநி ஸ்வபா[4]வப்ரப[4]வைர்கு[3]ணை: ॥

**அத்தியாயம்: 18 பாடல்: 42**

மனஅமைதி புலனடக்கமும் தவமும்
தூய்மையும் பொறுமைநேர்மையும் [1]அறிவும் ।
[2]அநுபவமும் வேதத்திலேநம் பிக்கையும்
ஸ்வபாவத் திலுதித்தஅந்தணர் செயல்களாம் ॥

[ 1 ஞானம் = அறிவும்;      2 விஞ்ஞானம் = அநுபவமும் ]

**शमो दमस्तपः शौचं क्षान्तिरार्जवमेव च ।**
ஶமோ த[3]மஸ்தப: ஶௌசம் க்ஷாந்திரார்ஜவமேவ ச ।
**ज्ञानं विज्ञानमास्तिक्यं ब्रह्मकर्म स्वभावजम् ॥**
ஜ்ஞாநம் விஜ்ஞாநமாஸ்திக்யம் ப்[3]ரஹ்மகர்ம ஸ்வபா[4]வஜம் ॥

அத்தியாயம்: 18 பாடல்: 43

பராக்ரமமும் துணிபும்தைர் ய,சாதுர்யமும்
போரில்புறங் காட்டிஓடாமை யும்கொடையும் ।
ஆட்சிமைத் தன்மையும்ஸ்வ பாவத்தில்-
உதித்தக்ஷத் திரியர்களின் செயல்களாம் ॥

शौर्यं तेजो धृतिर्दाक्ष्यं युद्धे चाप्यपलायनम् ।
ஶௌர்யம் தேஜோ த்⁴ரு'திர்தா³க்ஷ்யம் யுத்³தே⁴ சாப்யபலாயநம் ।
दानमीश्वरभावश्च क्षात्रं कर्म स्वभावजम् ॥
தா³நமீஶ்வரபா⁴வஶ்ச க்ஷாத்ரம் கர்ம ஸ்வபா⁴வஜம் ॥

அத்தியாயம்: 18 பாடல்: 44

உழவும்பசுக் களைக்காத் தலும்வணிகமும்
ஸ்வபாவத் தில்தோன்றியவைஶ் யசெயல்களாம் ।
மற்றையோருக் குஊழியஞ் செய்தலானது
நான்காம்வர்ணத் திலுதித்த செயல்களாம் ॥

कृषिगौरक्ष्यवाणिज्यं वैश्यकर्म स्वभावजम् ।
க்ரு'ஷிகௌ³ரக்ஷ்யவாணிஜ்யம் வைஶ்யகர்ம ஸ்வபா⁴வஜம் ।
परिचर्यात्मकं कर्म शूद्रस्यापि स्वभावजम् ॥
பரிசர்யாத்மகம் கர்ம ஶூத்³ரஸ்யாபி ஸ்வபா⁴வஜம் ॥

**அத்தியாயம்: 18 பாடல்: 45**

தத்தமக்கு உரியசெயலில் முழுமையான
ஈடுபாடுடைய மனிதன்நிறை நிலையடைகிறான் ।
தன்செயலில் நிலைபெற்றவன் எவ்விதமாய்
நிறைநிலைய டைகிறானென்ப தைக்கேட்பாயாக ॥

स्वे स्वे कर्मण्यभिरतः संसिद्धिं लभते नरः ।
ஸ்வே ஸ்வே கர்மண்யபி⁴ரத: ஸம்ஸித்³தி⁴ம் லப⁴தே நர: ।
स्वकर्मनिरतः सिद्धिं यथा विन्दति तच्छृणु ॥
ஸ்வகர்மநிரத: ஸித்³தி⁴ம் யதா² விந்த³தி தச்ச்²ரு'ணு ॥

**அத்தியாயம்: 18 பாடல்: 46**

எவரிடமிருந்து உயிர்களி னுற்பத்தியும்
எவராலி தெல்லாம் வியாபிக்கப்பட்டுளதோ ।
அவரைத்தன் தர்மத்திற் குரியசெயலாலே
[1]ஆராதித்து[2]நிறை நிலைத்தகு தியையடைகிறானே ॥

[ 1 அப்யர்ச்ய = ஆராதித்து; 2 ஸித்திம் = நிறைநிலை அடைவதற்கான தகுதியை / ஞானத்தைப் பெறுவதற்கான தகுதியை ]

यतः प्रवृत्तिर्भूतानां येन सर्वमिदं ततम् ।
யத: ப்ரவ்ரு'த்திர்பூ⁴தாநாம் யேந ஸர்வமித³ம் ததம் ।
स्वकर्मणा तमभ्यर्च्य सिद्धिं विन्दति मानवः ॥
ஸ்வகர்மணா தமப்⁴யர்ச்ய ஸித்³தி⁴ம் விந்த³தி மாநவ: ॥

அத்தியாயம்: 18 பாடல்: 47

நலமில்லாத தாயினும்தன் தர்மமானது
நன்கியற்றப் படும்பிறதர் மத்தினும் ।
நலமானதுவே; இயல்பாயமைந் தசெயல்களை
நிகழ்த்துப வன்பாவத்தை அடையமாட்டானே ॥

श्रेयान्स्वधर्मो विगुणः परधर्मात्स्वनुष्ठितात् ।
ஶ்ரேயாந்ஸ்வத⁴ர்மோ விகு³ண: பரத⁴ர்மாத்ஸ்வநுஷ்டி²தாத் ।
स्वभावनियतं कर्म कुर्वन्नाप्नोति किल्बिषम् ॥
ஸ்வபா⁴வநியதம் கர்ம குர்வந்நாப்நோதி கில்பி³ஷம் ॥

அத்தியாயம்: 18 பாடல்: 48

கௌந்தேயா! [1]முக்குணத்தோஷத் தோடுகூடியதாய்-
செயல்களி ருப்பினும்விட்டு விடக்கூடாது ।
ஏனெனில்புகை மூடியதீயைப் போல்செயல்கள்
எல்லாம்தோ ஷத்தால்மறைக் கப்பட்டுளதே ॥

[1 ஸதோஷமபி கர்ம = முக்குணத்தோஷத் தோடுகூடியதாய் செயல்கள் ]

सहजं कर्म कौन्तेय सदोषमपि न त्यजेत् ।
ஸஹஜம் கர்ம கௌந்தேய ஸதோ³ஷமபி ந த்யஜேத் ।
सर्वारम्भा हि दोषेण धूमेनाग्निरिवावृताः ॥
ஸர்வாரம்பா⁴ ஹி தோ³ஷேண தூ⁴மேநாக்³நிரிவாவ்ரு'தா:॥

**அத்தியாயம்: 18 பாடல்: 49**

எல்லாவிடத் தும்பற்றுகளை விலக்கிய
புத்தியுடையோனு மாசைகளைத் தணித்தோனும் ।
மனதைவென் றவனும்சன் யாசத்தால்[1]மேலான,
[2]செயல்களெலாம் நீங்கியநிலை யடைகின்றான் ॥

[ 1 பரமாம் = மேலான; 2 நைஷ்கர்ம்ய ஸித்திம் = செயல்களெலாம் நீங்கிய நிலை ]

**असक्तबुद्धिः सर्वत्र जितात्मा विगतस्पृहः ।**
அஸக்தபு3த்3தி:4 ஸர்வத்ர ஜிதாத்மா விக3தஸ்ப்ரு’ஹ: ।
**नैष्कर्म्यसिद्धिं परमां संन्यासेनाधिगच्छति ॥**
நைஷ்கர்ம்யஸித்3தி4ம் பரமாம் ஸம்ந்யாஸேநாதி4க3ச்ச2தி ॥

**அத்தியாயம்: 18 பாடல்: 50**

[1]அறிவின்முடி வானநிலையெதுவோ கௌந்தேயா!
அச்சித்திபெற்ற வன்பிரம்மத்தை யெவ்விதம் ।
அறிகின்றானோ, என்னிடத்திருந்து சுருக்கமாய்
அவ்விதத்தை நீயறிந்து கொள்வாய் ॥

[ 1 ஜ்ஞாநஸ்ய = அறிவின் = பிரம்ம ஞானத்தின் ]

**सिद्धिं प्राप्तो यथा ब्रह्म तथाप्नोति निबोध मे ।**
ஸித்3தி4ம் ப்ராப்தோ யதா2 ப்3ரஹ்ம ததா2ப்நோதி நிபோ3த4 மே ।
**समासेनैव कौन्तेय निष्ठा ज्ञानस्य या परा ॥**
ஸமாஸேநைவ கௌந்தேய நிஷ்டா2 ஜ்ஞாநஸ்ய யா பரா ॥

**அத்தியாயம்: 18 பாடல்: 51**

மிகத்தெளிந்த புத்தியுடன் கூடியவனும்
தன்னுடலுள்ள மதைஅடக் கியவனும் ।
ஓசைமுதலான புலப்பொருட் களைவிட்டும்
விருப்புவெறுப் புகளைமுற் றிலுமழித்தும்.... ॥

बुद्ध्या विशुद्धया युक्तो धृत्यात्मानं नियम्य च ।
பு³த்³த்⁴யா விஶுத்³த்⁴யா யுக்தோ த்⁴ரு'த்யாத்மாநம் நியம்ய ச ।
शब्दादीन्विषयांस्त्यक्त्वा रागद्वेषौ व्युदस्य च ॥
ஶப்³தா³தீ³ந்விஷயாம்ஸ்த்யக்த்வா ராக³த்³வேஷௌ வ்யுத³ஸ்ய ச ॥

**அத்தியாயம்: 18 பாடல்: 52**

தனிமையைநாடு பவனாய்க்குறைவா யுண்பவனாய்
மொழி,மெய்,மன மிவைகளையடக் கியவனாய் ।
தியானயோகத் திலெப்பொழுதும் கருத்தூன்றி
வைராக்கியத் தையடைந்தவனா யுள்ளவனும்.... ॥

विविक्तसेवी लघ्वाशी यतवाक्कायमानसः ।
விவிக்தஸேவீ லக்⁴வாஶீ யதவாக்காயமாநஸ: ।
ध्यानयोगपरो नित्यं वैराग्यं समुपाश्रितः ॥
த்⁴யாநயோக³பரோ நித்யம் வைராக்³யம் ஸமுபாஶ்ரித: ॥

அத்தியாயம்: 18 பாடல்: 53

அகங்காரத் தையுமவாவின் வலிமையையும்
செருக்கையும் இச்சையையும் கோபத்தையும் ।
உடைமையையும்விட் டு,எனதற்றும் அமைதியாயும்
பிரம்மமாவ தற்குஉரிய வனாகின்றானே ॥

अहङ्कारं बलं दर्पं कामं क्रोधं परिग्रहम् ।
அஹங்காரம் ப³லம் த³ர்பம் காமம் க்ரோத⁴ம் பரிக்³ரஹம் ।
विमुच्य निर्ममः शान्तो ब्रह्मभूयाय कल्पते ॥
விமுச்ய நிர்மம: ஶாந்தோ ப்³ரஹ்மபூ⁴யாய கல்பதே ॥

அத்தியாயம்: 18 பாடல்: 54

தான்பிரம்ம மென்றுதெளிந்த மனமுடையவன்
வருந்துவது மில்லைவிரும்பு வதுமில்லையே ।
எல்லாப்பொரு ளிடத்தும்சம மானவனாயும்
என்னிடத்து மேலாம்பக்தி யையடைகிறானே ॥

ब्रह्मभूतः प्रसन्नात्मा न शोचति न काङ्क्षति ।
ப்³ரஹ்மபூ⁴த: ப்ரஸந்நாத்மா ந ஶோசதி ந காங்க்ஷதி ।
समः सर्वेषु भूतेषु मद्भक्तिं लभते पराम् ॥
ஸம: ஸர்வேஷு பூ⁴தேஷு மத்³ப⁴க்திம் லப⁴தே பராம் ॥

அத்தியாயம்: 18 பாடல்: 55

எப்பக்தியினாலெனை யுள்ளபடியே "நான்யாவன்-
எத்தன்மையன்"என அறிகின்றானோ பின்பு ।
என்னையுள்ளபடி அறிந்தவ்வி தமறிவதால்
என்னிடத்திலே யுடனடியாய்ப் புகுகின்றானே ॥

भक्त्या मामभिजानाति यावान्यश्चास्मि तत्त्वतः ।
ப[4]க்த்யா மாமபி[4]ஜாநாதி யாவாந்யஶ்சாஸ்மி தத்த்வத: ।
ततो मां तत्त्वतो ज्ञात्वा विशते तदनन्तरम् ॥
ததோ மாம் தத்த்வதோ ஜ்ஞாத்வா விஶதே தத[3]நந்தரம் ॥

அத்தியாயம்: 18 பாடல்: 56

என்னிடத்தி லடைக்கலம் அடைந்தோனாய்
எல்லாவிதச் செயல்களையும் செய்பவனாய் ।
எப்பொழுதும் எனதருளால் [1]நிலையான
என்றுமுள்ளப் பதத்தினைய டைகின்றானே ॥

[ 1 ஶாஶ்வதம் = நிலையான ]

सर्वकर्माण्यपि सदा कुर्वाणो मद्व्यपाश्रयः ।
ஸர்வகர்மாண்யபி ஸதா[3] குர்வாணோ மத்[3]வ்யபாஶ்ரய: ।
मत्प्रसादादवाप्नोति शाश्वतं पदमव्ययम् ॥
மத்ப்ரஸாதா[3]த[3]வாப்நோதி ஶாஶ்வதம் பத[3]மவ்யயம் ॥

### அத்தியாயம்: 18 பாடல்: 57

எல்லாச்செயல் களையும்விவே கத்தினால்
என்னிடமர்ப் பணித்தெனையேமே லாய்க்கருதி ।
எப்பொழுதும் புத்தியோகத் துடன்கூடியே
என்பால்சித் தத்தைவைத் தவனாயிரு ॥

चेतसा सर्वकर्माणि मयि संन्यस्य मत्परः ।
சேதஸா ஸர்வகர்மாணி மயி ஸம்ந்யஸ்ய மத்பர: ।
बुद्धियोगमुपाश्रित्य मच्चित्तः सततं भव ॥
பு³த்³தி⁴யோக³முபாஶ்ரித்ய மச்சித்த: ஸததம் ப⁴வ ॥

### அத்தியாயம்: 18 பாடல்: 58

என்பால்சித் தம்பொருந்திய நீதடைகளை
எல்லாமென் அருளினாலேக டந்திடுவாய் ।
அவ்விதமின் றிஅகங்காரத் தினாலேநீ
கவனமாய்க் கேளாவிடி[1]லழி வையடைவாய் ॥

[ 1 முக்தியை அடையாது அழிவாய் ]

मच्चित्तः सर्वदुर्गाणि मत्प्रसादात्तरिष्यसि ।
மச்சித்த: ஸர்வது³ர்கா³ணி மத்ப்ரஸாதா³த்தரிஷ்யஸி ।
अथ चेत्त्वमहङ्कारान्न श्रोष्यसि विनङ्क्ष्यसि ॥
அத² சேத்த்வமஹங்காராந்ந ஶ்ரோஷ்யஸி விநங்க்ஷ்யஸி ॥

**அத்தியாயம்: 18 பாடல்: 59**

அகங்காரத் தைச்சார்ந்துப் போர்புரியேன்
அல்லேனென எண்ணுவாயாகில் உன்னுடைய ।
இந்நிச்ச யபுத்தியானது பொய்யானதாம்
[1]இயல்பானது உன்னைஈடுபடச் செய்யுமே ॥

[ 1 ப்ரக்ருதி: = இயல்பானது ]

**यदहङ्कारमाश्रित्य न योत्स्य इति मन्यसे ।**
யத³ஹங்காரமாஶ்ரித்ய ந யோத்ஸ்ய இதி மந்யஸே ।
**मिथ्यैष व्यवसायस्ते प्रकृतिस्त्वां नियोक्ष्यति ॥**
மித்²யைஷ வ்யவஸாயஸ்தே ப்ரக்ரு'திஸ்த்வாம் நியோக்ஷ்யதி॥

**அத்தியாயம்: 18 பாடல்: 60**

குந்திமகனே! இயல்பால்தோன் றியஎதனைச்
செய்யவிரும்ப வில்லையோ மோகத்தாலேயுன் ।
செயலால்பந் தப்பட்டவன் ஆவாயுன்வயம்
இன்றியே அதனைச்செய்யப் போகிறாய் ॥

**स्वभावजेन कौन्तेय निबद्धः स्वेन कर्मणा ।**
ஸ்வபா⁴வஜேந கௌந்தேய நிப³த்³த:⁴ ஸ்வேந கர்மணா ।
**कर्तुं नेच्छसि यन्मोहात्करिष्यस्यवशोऽपि तत् ॥**
கர்தும் நேச்ச²ஸி யந்மோஹாத்கரிஷ்யஸ்யவஶோऽபி தத் ॥

**அத்தியாயம்: 18 பாடல்: 61**

ஈஸ்வரனானவர் சகலஉயிர் களையும்
எந்திரத்திலேற் றியவஸ்துக் களைப்போல் ।
மாயையினாலுழலச் செய்துகொண் டனைத்து
உயிர்களினுள் ளத்திலும் உறைகின்றார் ॥

**ईश्वरः सर्वभूतानां हृद्देशेऽर्जुन तिष्ठति ।**
ஈஸ்வர**:** ஸர்வபூ4தாநாம் ஹ்ருʼத்3தே3ஶேSர்ஜுந திஷ்ட2தி ।
**भ्रामयन्सर्वभूतानि यन्त्रारूढानि मायया ॥**
ப்4ராமயந்ஸர்வபூ4தாநி யந்த்ராரூடா4நி மாயயா ॥

**அத்தியாயம்: 18 பாடல்: 62**

பரதகுலத் தவனே!அவ் வீஸ்வரனையே
எல்லாவிதத் திலும்சர ணமடைவாயே ।
அவருடைய அருளால் உயரமைதியையும்
[1]நிலையான [2]மேலாம்பதத்தை யடைவாயே ॥

[ 1 சாச்வதம் = நிலையான; 2 பராம் = மேலாம் ]

**तमेव शरणं गच्छ सर्वभावेन भारत ।**
தமேவ ஶரணம் க3ச்ச2 ஸர்வபா4வேந பா4ரத ।
**तत्प्रसादात्परां शान्तिं स्थानं प्राप्स्यसि शाश्वतम् ॥**
தத்ப்ரஸாதா3த்பராம் ஶாந்திம் ஸ்தா2நம் ப்ராப்ஸ்யஸி ஶாஶ்வதம் ॥

**அத்தியாயம்: 18 பாடல்: 63**

இவ்விதமாய் ரகஸ்யத்தினும் ரகஸ்யமான
ஞானமுனக் கென்னாலருளப் பட்டதுவே ।
[1]இதனைமுழு மையாய்நன்றாய் ஆராய்ந்தபின்
எவ்விதமிஷ் டப்படுகிறாயோ அவ்விதமேசெய் ॥

[ 1 ஏதத் = இதனை = இந்த கீதை சாஸ்திரத்தை ]

इति ते ज्ञानमाख्यातं गुह्याद्गुह्यतरं मया ।
இதி தே ஜ்ஞாநமாக்²யாதம் கு³ஹ்யாத்³கு³ஹ்யதரம் மயா ।
विमृश्यैतदशेषेण यथेच्छसि तथा कुरु ॥
விம்ரு'ஶ்யைதத³ஶேஷேண யதே²ச்ச²ஸி ததா² குரு ॥

**அத்தியாயம்: 18 பாடல்: 64**

எல்லாவற் றிலும்ரகஸ்ய மானஉயர்வான
எனது மொழியைமீண்டும் கேட்பாயாக ।
எனக்குமி கப்பிரியமானவ னாயுள்ளாய்
உனக்கத னால்நல்லதையே பகர்வேன் ॥

सर्वगुह्यतमं भूयः शृणु मे परमं वचः ।
ஸர்வகு³ஹ்யதமம் பூ⁴ய: ஶ்ரு'ணு மே பரமம் வச: ।
इष्टोऽसि मे दृढमिति ततो वक्ष्यामि ते हितम् ॥
இஷ்டோSஸி மே த்³ரு'ட⁴மிதி ததோ வக்ஷ்யாமி தே ஹிதம் ॥

**அத்தியாயம்: 18 பாடல்: 65**

என்னிடமே மனமுடையோனாய் பக்தனாய்
எனையேபூஜிப் பவனாயெனையே வணங்குபவனாய் ।
எனையேயடைவா யுறுதிசெய்கிறேன் [1]சத்யம்நீ
எனக்குபிரிய மானவனாயி ருக்கின்றாயே ॥

[ 1 சத்யம் = உண்மையாய் ]

मन्मना भव मद्भक्तो मद्याजी मां नमस्कुरु ।
மந்மநா ப⁴வ மத்³ப⁴க்தோ மத்³யாஜீ மாம் நமஸ்குரு ।
मामेवैष्यसि सत्यं ते प्रतिजाने प्रियोऽसि मे ॥
மாமேவைஷ்யஸி ஸத்யம் தே ப்ரதிஜாநே ப்ரியோSஸி மே ॥

**அத்தியாயம்: 18 பாடல்: 66**

எல்லா[1]தர்மத் தையும்நன்றாய்த் துறந்தும்
என்னொருவனி டத்திலேயேஅடைக் கலமாவாய் ।
எல்லாப்பாவங் களிலிருந்தும் உனைநான்
என்றும்விடுவிப் பேன்வருத்தப் படவேண்டாம் ॥

[ 1 தர்மாந் = தர்ம - அதர்மத்தையும் நன்றாய் துறந்து ]

सर्वधर्मान्परित्यज्य मामेकं शरणं व्रज ।
ஸர்வத⁴ர்மாந்பரித்யஜ்ய மாமேகம் ஶரணம் வ்ரஜ ।
अहं त्वा सर्वपापेभ्यो मोक्षयिष्यामि मा शुचः ॥
அஹம் த்வா ஸர்வபாபேப்⁴யோ மோக்ஷயிஷ்யாமி மா ஶுச: ॥

**அத்தியாயம்: 18 பாடல்: 67**

இவ்வுபதேசம் உன்னாலொரு போதும்தவம்-
இல்லாதவனுக் கும்பக்தனல் லாதோனுக்கும் ।
[1]இறைசேவைசெய் யாதவனுக்குமீ தலாகாதே,எனை
இகழ்கின்றானெ வனோஅவனுக்கு மீதலாகாதே ॥

[ 1 இறைசேவை = ஈஶ்வர / குரு - பணிவிடையும் பக்தியும் இல்லாத ]

इदं ते नातपस्काय नाभक्ताय कदाचन ।
இத³ம் தே நாதபஸ்காய நாப⁴க்தாய கதா³சந ।
न चाशुश्रूषवे वाच्यं न च मां योऽभ्यसूयति ॥
ந சாஶுஶ்ரூஷவே வாச்யம் ந ச மாம் யோ஽ப்⁴யஸூயதி ॥

**அத்தியாயம்: 18 பாடல்: 68**

உயர்பக் தியையாரென்னிடம் செய்துகொண்டே
உயர்ந்த ரகஸ்யமான இவ்வுபதேசத்தை ।
உள்ளன்புடன் என்பக்தர்களிடத்தில் உபதேசிப்பவன்
உண்மையில் என்னையேயடைவான் சந்தேகமின்றியே ॥

य इदं परमं गुह्यं मद्भक्तेष्वभिधास्यति ।
ய இத³ம் பரமம் கு³ஹ்யம் மத்³ப⁴க்தேஷ்வபி⁴தா⁴ஸ்யதி ।
भक्तिं मयि परां कृत्वा मामेवैष्यत्यसंशयः ॥
ப⁴க்திம் மயி பராம் க்ரு’த்வா மாமேவைஷ்யத்யஸம்ஶய: ॥

அத்தியாயம்: 18 பாடல்: 69

அம்மாந்தரில் எனக்குப்பிரியம் செய்தவரில்
அவனைவிட அதிகம் செய்பவரெவருமில்லை ।
அவனைவிட எனக்குமிகப் பிரியமானவன்
அகிலத்தில்வேறெ வரும்தோன்றப் போவதில்லை ॥

न च तस्मान्मनुष्येषु कश्चिन्मे प्रियकृत्तमः ।
ந ச தஸ்மாந்மநுஷ்யேஷு கஶ்சிந்மே ப்ரியக்ரு'த்தம: ।
भविता न च मे तस्मादन्यः प्रियतरो भुवि ॥
ப⁴விதா ந ச மே தஸ்மாத³ந்ய: ப்ரியதரோ பு⁴வி ॥

அத்தியாயம்: 18 பாடல்: 70

நம்மிருவருடைய இத்தர்ம மயமான
நல்உரையாடலை யாவன்கற்ற றிகிறானோ ।
நானவனால்ஞான வேள்வியாலே ஆராதிக்கப்-
பட்டவனாவேன் என்பதென் தீர்மானமாம் ॥

अध्येष्यते च य इमं धर्म्यं संवादमावयोः ।
அத்⁴யேஷ்யதே ச ய இமம் த⁴ர்ம்யம் ஸம்வாத³மாவயோ: ।
ज्ञानयज्ञेन तेनाहमिष्टः स्यामिति मे मतिः ॥
ஜ்ஞாநயஜ்ஞேந தேநாஹமிஷ்ட: ஸ்யாமிதி மே மதி: ॥

**அத்தியாயம்: 18 பாடல்: 71**

எம்மனிதன் நம்பிக்கை யுள்ளவனாயும்
எக்குறையும் காணாதவனா யும்;கேட்கவாவது- ।
செய்யுமவன் [1]விடுபட்டவனாய் புண்ணியச்-
செயல்செய் தோரின்நல் லுலகையடைவான் ॥

[ 1 முக்த: = பாவங்களிலிருந்து விடுபட்டவனாய் ]

**श्रद्धावाननसूयश्च शृणुयादपि यो नरः ।**
ஶ்ரத்³தா⁴வாநநஸூயஶ்ச ஶ்ரு’ணுயாத³பி யோ நர**:** ।
**सोऽपि मुक्तः शुभाँल्लोकान्प्राप्नुयात्पुण्यकर्मणाम् ॥**
ஸோ**ऽ**பி முக்த**:** ஶுபா⁴ம்ல்லோகாந் ப்ராப்நுயாத் புண்யகர்மணாம் ॥

**அத்தியாயம்: 18 பாடல்: 72**

உன்னால்நன்கு ஒருநிலைப்பட்ட மனதுடனே
உபதேசமானது கேட்கப்பட்டதா? பார்த்தனே! ।
உன்னுடைய அறியாமையால் உண்டாகிய
உன்பெருங்குழப் பமழிந்ததா? தனஞ்ஜயனே! ॥

**कच्चिदेतच्छ्रुतं पार्थ त्वयैकाग्रेण चेतसा ।**
கச்சிதே³தச்ச்²ருதம் பார்த² த்வயைகாக்³ரேண சேதஸா ।
**कच्चिदज्ञानसम्मोहः प्रनष्टस्ते धनञ्जय ॥**
கச்சித³ஜ்ஞாந ஸம்மோஹ**:** ப்ரநஷ்டஸ்தே த⁴நஞ்ஜய ॥

**அத்தியாயம்: 18 பாடல்: 73**

**"அர்ஜுனன் புகன்றான்"**

அச்சுதனே! அழிந்தது[1]மயக்க முமதருளாலே,
அடையப்பட்டதே நினைவுகூர்தலும் என்னாலே, ।
[2]உறுதியோ டிருக்கின்றேன் சந்தேகங்களோ
விலகியதே, உம்திருவாக் கின்படிச்செய்வேனே ॥

[ 1 மோஹ: = அஜ்ஞானம் = மயக்கம்;
2 ஸ்திதோஸ்மி = உறுதியோடிருக்கின்றேன் ]

**अर्जुन उवाच ।**

**அர்ஜுந உவாச ।**

नष्टो मोहः स्मृतिर्लब्धा त्वत्प्रसादान्मयाच्युत ।
நஷ்டோ மோஹ: ஸ்ம்ரு’திர்லப்[3]தா[4] த்வத்ப்ரஸாதா[3]ந்மயாச்யுத ।
स्थितोऽस्मि गतसन्देहः करिष्ये वचनं तव ॥
ஸ்தி[2]தோSஸ்மி க[3]தஸந்தே[3]ஹ: கரிஷ்யே வசநம் தவ ॥

**அத்தியாயம்: 18 பாடல்: 74**

**"சஞ்ஜயன் புகன்றான்"**

நானிவ்விதமாய் மகாத்மா வாஸுதேவருக்கும்
மாவீரன் பார்த்தனுக்குமிடையிலே நிகழ்ந்த ।
மயிர்க்கூச் செறியும் அத்புதமானஸ்வரூப
நல்கலந் துரையாடலைக் கேட்கப்பெற்றேனே ॥

सञ्जय उवाच ।

**ஸஞ்ஜய உவாச ।**

इत्यहं वासुदेवस्य पार्थस्य च महात्मनः ।
இத்யஹம் வாஸுதே[3]வஸ்ய பார்த[2]ஸ்ய ச மஹாத்மந: ।
संवादमिममश्रौषमद्भुतं रोमहर्षणम् ॥
ஸம்வாத[3]மிமமஸ்ரௌஷமத்[3]பு[4]தம் ரோமஹர்ஷணம் ॥

**அத்தியாயம்: 18 பாடல்: 75**

ஸ்ரீவியாஸ ரினருளாலேஉத் தமரகஸ்யமும்
யோகசாஸ்த் திரமுமாகியயிதை நான்,பகவான்- ।
யோகேஶ்வரரும், தாமாகவே சொன்னவருமான
ஸ்ரீகிருஷ்ணரிடம் நேராகக் கேட்டவனானேனே ॥

व्यासप्रसादाच्छ्रुतवानेतद्गुह्यमहं परम् ।
வ்யாஸப்ரஸாதா³ச்ச்²ருதவாநேதத்³கு³ஹ்யமஹம் பரம் ।
योगं योगेश्वरात्कृष्णात्साक्षात्कथयतः स्वयम् ॥
யோக³ம் யோகே³ஶ்வராத்க்ரு’ஷ்ணாத்ஸாக்ஷாத்கத²யத: ஸ்வயம் ॥

**அத்தியாயம்: 18 பாடல்: 76**

ராஜனே! கேசவருக்குமர் ஜுனருக்குமிடையே
நிகழ்ந்த இப்புண்ணியமும் அத்புதமுமான ।
இக்கலந் துரையாடலை நினைந்துநினைந்து
மீண்டும் மீண்டும்மகிழ்ச் சியடைகின்றேன் ॥

राजन्संस्मृत्य संस्मृत्य संवादमिममद्भुतम् ।
ராஜந்ஸம்ஸ்ம்ரு’த்ய ஸம்ஸ்ம்ரு’த்ய ஸம்வாத³மிமமத்³பு⁴தம் ।
केशवार्जुनयोः पुण्यं हृष्यामि च मुहुर्मुहुः ॥
கேஶவார்ஜுநயோ: புண்யம் ஹ்ரு’ஷ்யாமி ச முஹுர்முஹு: ॥

**அத்தியாயம்: 18 பாடல்: 77**

அந்த ஸ்ரீஹரியான ஸ்ரீகிருஷ்ணருடைய
அத்புதமானவடி வினைநினைந்து நினைந்து ।
அதிகவியப் புண்டாகின்றது எனக்கு
அரசே! மகிழ்வுறுகின்றேனே மீண்டும்மீண்டும் ॥

तच्च संस्मृत्य संस्मृत्य रूपमत्यद्भुतं हरेः ।
தச்ச ஸம்ஸ்ம்ரு’த்ய ஸம்ஸ்ம்ரு’த்ய ரூபமத்யத்[3]பு[4]தம் ஹரே: ।
विस्मयो मे महान् राजन्हृष्यामि च पुनः पुनः ॥
விஸ்மயோ மே மஹாந் ராஜந்ஹ்ரு’ஷ்யாமி ச புந: புந: ॥

**அத்தியாயம்: 18 பாடல்: 78**

எங்கே யோகேஶ்வரக் கிருஷ்ணரிருக்கின்றாரோ
எங்கே வில்லேந்திய விஜயனிருக்கின்றானோ ।
அங்கே திருவும்வெற் றியும்ஐஶ்வர்யமும்
**“நிலைத்த நீதியுமுளதென்ப தென்கருத்தாம்”** ॥

यत्र योगेश्वरः कृष्णो यत्र पार्थो धनुर्धरः ।
யத்ர யோகே[3]ஶ்வர: க்ரு’ஷ்ணோ யத்ர பார்தோ[2] த[4]நுர்த[4]ர: ।
तत्र श्रीर्विजयो भूतिर्ध्रुवा नीतिर्मतिर्मम ॥
தத்ர ஸ்ரீர்விஜயோ பூ[4]திர்த்[4]ருவா நீதிர்மதிர்மம ॥



## ஓம் தத் ஸத்

இவ்விதம் ஸ்ரீமத் பகவத்கீதையில், உபநிஷத்தில்,
பிரம்மவித்யையில், யோகஶாஸ்த்திரத்தில்,
ஸ்ரீகிருஷ்ணருக்கும் அர்ஜுனனுக்கும்
இடைப்பட்ட நல்வாதத்தில்,

## “முக்தித் துறவு”

எனும் இப்பதினெட்டாம் அத்தியாயம்

சின்மயதாசன் கிருஷ்ணாத்மாநந்தனால்
தமிழ்ப்பாடல்களாய் இயற்றப்பட்டது
இனிதே இறையருளால் நிறைவுற்றதே. ॥

**ॐ तत्सदिति श्रीमद्भगवद्गीतासूपनिषत्सु**

ஓம் தத்ஸதி$^{3}$தி ஸ்ரீமத்$^{3}$ப$^{4}$க$^{3}$வத்$^{3}$கீ$^{3}$தாஸூபநிஷத்ஸு

**ब्रह्मविद्यायां योगशास्त्रे**

ப்$^{3}$ரஹ்மவித்$^{3}$யாயாம் யோக$^{3}$ஶாஸ்த்ரே

**श्रीकृष्णार्जुनसंवादे**

ஸ்ரீக்ரு'ஷ்ணார்ஜுநஸம்வாதே$^{3}$

**मोक्षसंन्यासयोगो नाम**

மோக்ஷஸம்ந்யாஸயோகோ$^{3}$ நாம

**अष्टादशोऽध्यायः ॥**

அஷ்டாத$^{3}$ஶோऽத்$^{4}$யாய: ॥

# நூலாசிரியர்



**ஆச்சார்யர்**

உலக சின்மய மிஷன் ஸ்தாபகர் குருதேவர் ஸ்வாமிசின்மயநந்தரின் தமிழ் சாந்தீபநீ சாதனாலய –வேதாந்த குருகுலத்தால் ஈர்க்கப்பட்டு, சின்மய மிஷன் தமிழில் நிகழ்த்தும் ஆன்மீக குருகுலப் பயிற்சியில் 1991-ல் சேர்ந்து, ஆச்சார்யர், தவத்திரு ஸ்வாமி வாகீஶானந்த ஸரஸ்வதி அவர்களுடனிருந்து மூன்று ஆண்டுகள் வேதாந்த சாஸ்த்திரங்களை முறைப்படிப் பயின்றார்.

இவ்வான்மீகப் பயிற்சியின் நிறைவில், 1993-ல் பிரம்மச்சாரி தீட்சை பெற்று, 2002 வரை சின்மய மிஷன், சிறுவாணி, கோயம்புத்தூர் கிளையில் சேவை செய்து வந்தார். பின்னர் 2020 வரை சேலம், ஹோசூர் ஆகிய சின்மய மையங்களின் ஆச்சார்யராக இருந்தார்.

ஸ்ரீமத் பகவத்கீதையின் 18 அத்தியாயங்களையும் விரிவாக **ஸ்ரவண சாதனை** என்ற முறையில் மூன்று முறை நிகழ்த்தியுள்ளார்.

ஸ்ரீமத் பகவத்கீதை, உபநிஷத்துகள், கைவல்யநவநீதம், திருவாசகம், வேதாந்த மற்றும் பக்தி நூல்களின் கருத்துக்களை ஆன்மீக சாதகர்களுக்கு விளக்கி இந்தியாவின் பல பகுதிகள், மற்றும் ஸ்ரீலங்கா ஆகிய இடங்களில் இதுகாறும் **150 -க்கும் மேற்பட்ட ஞான வேள்விகள்**, **ஆன்மீக முகாம்கள்,** மற்றும் **சாதனை** வகுப்புகளை நிகழ்த்தியுள்ளார்.

**பள்ளிகள் மற்றும் கல்லூரிகளில் C-VEP (C**hinmaya **V**aluebased **E**ducation **P**rogramme**)** என்ற மாணவ, மாணவிகளுக்கான குணங்களுடன் கூடிய ஆளுமைப் பண்புகளை விதைக்கும் வகுப்புகளை **I.**ராமாயணம்-Value vs Values; **II.**பாகவதம்-Young Leaders & Perfect Leader**; III.**ஹனுமான் சாலிசா-Personality Development; மற்றும் **IV.**விபீஷண கீதை–Key to Success ஆகிய நூல்களின் துணைகொண்டு **நிகழ்த்தி** வந்தார்.

**மேலும் பெருநிறுவனங்களில்** [Corporate Companies] workshop, seminar like **P-Cube** [Potential–Performance–Perfect], 4-A [Aim–Analyse–Act-Achive] போன்ற பண்புகள், நிர்வாக ,ஆளுமைத்திறன் வகுப்புகளை நிகழ்த்திவந்தார் .

இவர் ஆழ்ந்த கருத்துக்களையும் மிக எளிமையாகவும், நகைச்சுவை உணர்வுடனும், அன்றாட வாழ்வியல் உதாரணங்களின் மூலம் விளக்கிக் கூறும் திறன் படைத்தவர்.

இப்படிப்பட்ட இவர் உள்ளத்தின் உந்துதலால் உலகிற்கு உதவும் பொருட்டு, ஸ்ரீமத் பகவத்கீதை ஶ்லோகங்களின் நேர் அர்த்தத்தை அளிக்கும் தமிழ்ப்பாடல்களாய் இயற்றியுள்ளார். இது நூலாய் வெளிவருவது அனைவருக்கும் நற்பயனை நல்கும் என்பது திண்ணம். கீதையின் ஸம்ஸ்கிருத ஶ்லோகங்களை படித்துப் பயில இயலாவிடினும், தமிழ்ப்பாடல்களைப் படித்தும், பயின்றும் முழுப்பலனையும் பெறுவோமாக.

ஸ்ரீமத் பகவத்கீதை ஶ்லோகங்களைத் தமிழ்ப்பாடல்களாய் இயற்றிவர்:

**ஸ்வாமி கிருஷ்ணாத்மாநந்த ஸரஸ்வதி**

**ஹரி: ஓம்!**